# ஸ்ரீ கிருஷ்ணகர்ணாமிர்தம்.



கோவிலூர்
KOVILOOR
MADALAYAM
மடாலயம்

கோவிலூர் ஆண்டவர்
A. No. 4137
922

ஸ்ரீரங்கம் :
ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.
1929.

உ

ஹரி : ஓம்.

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வர

கிருஷ்ணாய குருப்பிர்மணே நம :

ஸ்ரீபகவத் தெரிசன லீலானந்த பாவசாராய் விளங்கிய

லீலாசுகரால் அருளிச் செய்த

# ஸ்ரீ கிருஷ்ணகர்ணாமிர்தம்.

முந்நூற்றிருபத்தைந்து சுலோகங்களில்

இடை நூற்றெண்பது சுலோகங்களின் தாற்பரியங்

கொண்ட தமிழ்ப் பாசுரங்கள்.

இது

முன்னோர்களால் எழுதப்பட்ட

ஏட்டுப் பிரதியின்படி

கோஷ்டிப் பிரதேச தரிசனப் பிரவர்த்தக

சமூக சம்பந்தர்களால்

பிரசுரிக்கப்பட்டது.



ஸ்ரீரங்கம் :

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.

1929.

ஹரி:ஓம்:



ஸ்ரீ ராஜ ராஜேஷ்வர
கிருஷ்ணாய குருப்பிர்மணே நம :

## காப்பு.

சீர்பூத்த பரஞ்சுடராம் பரப்பிர்மபரமேசன் சிறந்தவன்பால் பார்பூத்த மாந்தர்கடன் பவமகற்றிப் பதமளிக்கப் பார்மேல் வந்த, கார்பூத்ததிருமேனிக் கிருஷ்ணகர்ணாமிர்தக் காதை தன்னை, ஏர்பூத்த தமிழ்ப் பாவி லியம்புதற்குப், பரமகுரு பிணைத்தாள் போற்றி.

சிந்தாமணியாமெனவருளுஞ் சிறந்த சோமகிரியருளால்
பைந்தார்துளபமாதவனின் பாலலீலைதனின் மூழ்கித்
தொந்தமகற்றி யருள்பெற்ற துரியலீலா சுகர்போல
எந்தாயடியே னிதயத்து ளிருந்தே யருளவேண்டினனே.

உ

ஹரி:ஓம்:

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்பிர்ம்மணே நம:

# ஸ்ரீ கிருஷ்ணகர்ணாமிர்தம்.

அன்று கரும் வெண்ணையுண்டு
பளபளத்தனற்பசுவி னமுதந்தேங்கி
சென்றிடைய ரகந்தோறுந்தினங்கடையுந்
தயிர்சிதருந் திமிர்தம்பூசி
மன்றலருந்தாபிஞ்ச நிறம்போன்ற
மயிற்ரேகை மௌலிசூடி
நின்றுலகத்திடர்தீர்க்கு நெடுமால்தன்
னிறந்தரும் யானினைந்ததெல்லாம். 1

ஆனிரைத்தொகுதிதாகமுற்றமுனை
யாறெனப் புனலைநாடவும்
வானிரைத்ததென நீலவுத்தம
மயூரவர்க்கநடமாடவும்
மானிடைச்சியர்கள் காதில்வைத்திடு
தமாலபத்ரவகைதேடவும்
மேனிபெற்றரவு மேல்நடித்தயது
வீரனைத்துதிசெய்வாமரோ. 2

விமலமாம் யமுனை வாரியிற்குளிக்கும்
மின்னிடைமாதர் பொன்னுடைகள்
அமைவுறவெல்லாமபகரித்திடும்போ
தணைவருமாடை யாசித்துத
தமதுளமயங்கி நாணொடும்பஞ்ச
சரம்பொருகாமனை விளைக்கும்.
கமலநேர்விழியாலர்ச்சனைசெய்யக்
களித்தகேசவன் கதியெமக்கே. 3

தாயேவாணித்தாள்ந்தோர்முன்னஞ்
சங்கையிலாதனுசிதமாய்
வாயேபுலம்பித்தமியேன்சாண்
வயிறுவளர்க்கவாயலைந்தேன்
நீயேபொறுக்கவேண்டுமினி
நெறியாங்கருமம்புரிந்திடுகச்
சேயாம்நந்தன்மைந்தனையென்
சிந்தைநினைக்கச்செய்வாயே. 4

செங்கையங்குலியின்முனைகளால்மூடித்
திறந்துமூடித்திறந்திலகும்
பங்கயவதனப்பவனமாதுரியப்
பணுவலால் முரளியைநிறைத்து
மங்கையர்சூழ வனந்தனிலொருகால்
மாறிநின்றருள்பெருங்கமலச்
செங்கணுன்றன்னை நந்தகோபாலன்
சிறுவனைத்தொழுதிடுமனமே. 5

மெல்லமெல்ல மதுரத்தொனியினால்
வேணுவால் நிறைத்தேவிருந்தாவனம்,
செல்லவல்ல பசுநிரை மேய்த்துடன்
சென்றுவேதச்சிகையினுஞ்சேருமால்,
வெல்லவல்லசதமகனுதியை
வென்றதானவர்மெய்விழ வென்றவன்,
நல்ல வல்லவன் மாதர் மனோகரன்
னுமமென்றுமென்னுவிலுரைப்பதே. 6

கனநிறத்தோகைசூழ்ந்த கருங்குழற்பின்னல்வாய்ப்ப
வனமலர்த்துளபம்பூண்டு வளைந்துபொன்னுடைமின்ன
மனமகிழ்திருவின்மாயன் மரகதமனையதோளாற்
கனவினிற்றழுவிக்கொள்ளக்கண்டதேகாட்சிதானே

கோவியராடையெல்லாங் கொண்டுகோபாலமூர்த்தி
தாவியேகுருந்திலேறித் தானகைத்திருந்தகாலை [று
காவிவாய்மலர்ந்தோர்மாது காதலானகைத்தேதென்
கூவிமாநிழற்கறத்திற்குருதுகிலிழுத்துக்கொள்வாள். 8

கதிரவன்றன் மகவான காளிந்தி
நதிக்கறையின் கழைபோல் யானும்,
அதிசயமாய் முற்சென்மத் தரிபூசை
செய்துபல னடைவதென்றோ,
மதுரமொழுகிடமாயன் வாஞ்சையொடு
தீங்குழலை வாய்வைத்தூத,
அதரமணிமுனையிலிருந் தனுபவிக்கும்
பாக்கியமன்றோ பாக்கியமாமே, 9

சுகந்தமலர்க்கமலவிழித் துணையானைப்
பச்சைமயிற் றோகைசூழ்ந்து,
முகம் பிரசன்னமாய் விளங்கு முடித்த சிரு
கொண்டைமுக முளரியானை,
யுகந்திடுமிந்திரநீலவுருவானை
யிடைமாத ருள்ளத்தானை,
மூகுந்தனைநான் மறைக்கொடியின்
மூலவித்தைய னுசரித்தேமொழி நன்னெஞ்சே.

அச்சுதனுனனகமலத் தழகான மதுரரசமறிந்த வேயே, உச்சிதமாயுனைப்பணிந்தேனுபகாரம் நீயுரைப்ப தொன்றுகேளாய், இச்சையுடன்மாயனுனையிதழருகில் வைத்திடும்போ தேகாந்தத்தில், நிச்சயமாயவர் செவியிற்றமியேனைநேசமுற நினைவிப்பாயே. 11

கருமுகிலாம்நிறத்தவனைக்காதலிடைமாதர்தனைக் கலந்தகோனை, தருநிழலிலுறைபவனைத்தயங்கொளி சேர்பொன்னுடைதரித்தமாலை, சுரர்முனிவர்பணிபவ னைத் தூயதவத்தோர்மனதிற் றுலங்குவோனை, நிருதர் குலந்துடைத்தவனை நினைந்திடு கோபாலனையென் னோநெஞ்சே. 12

அதரவிம்ப மரும்பவ ளம்பொரும்
மதுரமென்குழல் வன்சொல்விநோதமும்
வதனபங்கயமும் மறவாமலென்
னிதயம் நந்தன் மகன்றனை யெண்ணுமே. 13

பவளமெல்லிதட் படிந்த பொன்முரளியிற்பகுத்த
விவரபந்தியினடிக்கடி விரல்கள் பன்முறையே
நவநவந்தருகானமாம் நவரசம்பொழிய
உவமையன்றிநம் மாயவன் வனத்திலூதினனால். 14

முகத்தெழுந்தநவநீதவாடையும்
மொழியில் மிஞ்சுகள வோடுபாயமும்,
அகத்திலஞ்சுமிருகண்பிசைந்துபொய்
யழுகைதந்தகவ டிந்திரசாலமும்,
மகத்வமுஞ்சிறு சிலம்பணிந்தகோ
மளபதங்கடரு வாலநாட்டியமுஞ்,
செகத்தை யுண்ட திருமால் விநோதமென்
சிந்தைகொண்டதிறமே தியானமே. 15

ஆயர்தருஞ்சிறுபாலனை யஞ்சலெ
னுதாவின்சொலுமாறாதே,
தோயமிகுந்தமுனைநதியின்கறை
சூழ்வனமுண்டிடவான்மீதே,
தீயுறவந்தவனு லனலென்பது
சோவிழுங்கியவாயோனை,
மாயனைநம்பினம் யாமெமை நொந்திட
மாவினை வன்பிணி வாராதே. 16

உலகெலாஞ் சிருஷ்டித்திட மபக்கமுற்றிருந்த
இலகுநான்முகற் கிருமறை யெகினமுற்றிசைக்கும்
திலகவிந்திர நீல மேனிய திருமார்ப
விலகிலாத வெம்பவவினை விலக்கவேண்டினமே. 17

ஆயர் சுந்தரியார் சாணும் புயங்களினுந்
தூயமாதவ ருளத்தினுஞ் சுருதியுச்சியினும்
நேயமாகிய மால்கருணா நிதிக் கெல்கை
யேயுநந்தன்மைந் தனேச்சதா வெண்ணுவ தியல்பே. 18

அறக்குழந்தை வடிவழகு மருங்காயாம் பூநிறமு
மன்றுதாயின்,
பிறக்கிலிருந் திடுமறையும் பின்புதரித்திடுங்கனகா
பாணப்பேறும்,
பறக்குமிளங்குந்தளமும் பவளமணி வாயிதழும்
பதுமக்கண்ணுஞ்,
சிறக்குமணி வண்ணனைநம் வசுதேவர் சிறுவனையாம்
சிந்திப்பாமே. 19

கையிலணி கங்கணமுங் காலினிறைகிண்கிணியுங்
கலகலென்ன,
ஐய்பரிதம் பத்திடையிற் சூழ் சொர்ணவளைஞாணுந்
துவண்டிலங்க,
மெய்யளகமுகுளிதமாய் முத்தொழுங்கின் கோர்வை
யொளி முடிவிளங்க,
வையமிசை வள்ளலெனும் வசுதேவர்பாக்கியத்தை
வந்திப்பாமே. 20

விருந்தாவனத்தருவினிடந்தோறும் வேதாந்த
சமயந்தோறும்,
சிந்தாத நிரைதிரண்ட தேனுகணந் தோறுமென்றுஞ்
சென்று தோன்றும்,

மந்தாரமாலையொடு மயிற்றேகை யணிந்துகுழல்
மதுரஞ்சார்ந்த,
செந்தாமறைக் கண்முகில் நீலமெனுஞ் சின்மயத்தைச்
சிந்திப்பாமே. 21

ஒருகாலை யூன்றிமற்ற வொருகாலின் முனைகீழாய்
மாறியூன்றி,
தருகான வேணுகாந் தரித்துமுகஞ் சாய்த்ததாங்
தன்னில்வைத்து,
மருவாரு முடிவிளங்கு மயிற்றேகை யணிந்துகிர்பை
வாய்க்க நோக்கி,
வெருவாமலென்றனுயிர்வெளிப்படும்போதென்முன்வா
வேணுமாலே. 22

கோகுலத்தி னவரவர்தன் கூக்குறல்கண்டதைநிறுத்தக்
கொணர்ந்தசோதை,
யாகுலத்தாற் றன்மகனை யடித்துமத்தி லுருங்கயிற்று
லரையில்வீக்கத்,
தேகமதிற்புவனமெல்லாஞ்சேர்ந்துதாந் தனிற்கிடக்குஞ்
செய்கைதன்னால்,
யேகமுகமாயுலகி லெல்லோர்க்கு நொந்தழுகை
யெழுந்ததம்மா. 23

சைவமத மெங்கள்மதஞ் சங்கானைத்தொழுவது
சந்தேகமில்லை, ஐவகையா மூலமந்தி ராட்சாமே செப
தபங்களாயினுலும், நெய்யருந்துமாயர்குல நேயவனைக்

காயாம்பூ நிறம்பெற்றேனை, தெய்வவடிவழகனையென்
சிந்தைநினைந்திடுமினியான் செய்வதென்னோ. 24

மாதவனைக்கண்டொருநாள் மதிமயங்கி ராதை பர
வசமாய் மத்தை,
காதமெழக்கடைந்தனள்வெண்ணறுந் தயிரிலாதகட
நடுவில்வைத்து,
சீதாணுமாங்கவடன் செங்கனகத் தணிமுலைமேற்
சிந்தையாகிச்,
சாதுபசு வென்றிடபந்தனைக்கறக்கத்தனைந்தனனுச்
சரியந்தானே. 25

அலையுநுனிக்குங்களத்தினமுழுந்தியகோ தூளியலங் காரமாக, மலையெனுங்கோ வர்த்தனத்தை வாமகரத் தாலெடுத்து மாரிகார்த்து, குலவியிடை மைந்தரொடு கோகுலத்தை யாதரித்துக் கோபிமார்தம், முலைகளழுந் தியமார்பு முத்நிரையோ னடிபணிவ முற்றும் யாமே.

வாராக வடிவிலொரு மயிற்காலை மறைப்பதற்கு மாட்டாநின்ற, காாருங்கடலேழுமாகியந்தக்கண்ணனை த்தன் காற்கிடத்தி, ஏாரும்பூமுலையசோதை நலுங் கிட்டிருகை யேந்து நீராற், சீாருந் திருமேனி முழுதுமுழுக்காட்டிவிட்டாள் சித்ரந்தானே. 27

சதுமறை வனத்திற்றேடிச் சலிப்புறும் பெரி யோர்கேளீர், பொதுவுறப் பகர்வேதாந்தப் பொரு ளுறையிடம்யாஞ்சொல்வோம், மதுமலர்க்கூந்தலாயர்

மாதர்வா ழகங்கடோறும், புதுமணி யுறவிற்கட்டிப்
புனைந்திருந் திடுங்கண்டீரே. 28

சீதான்றனையேபூசை செய்து யான் சுத்தனானேன்,
பூதனைவதைத்தோன்பாதப் புனல் நனைந்தமலனானேன்,
சூதனைப்பாண்டவற்குத்தோழனையகத்தில்வைத்தேன்,
யேதெனைச்செய்வதந்த யெமபுரத்தூதர்தாமே. 29

பவமெனும்பய மொருக்குமோர் மருந்தெனப்பலித்தே
யுவமையன்றியோரிடைப்பிள்ளை யுருவெனக்கொண்டு
சுவயமாகிய சோதியாஞ், சுந்தரமாயன்
அவனடிக்கடி யென்மனத் தகத்துறைபவனே. 30

காதிலங்கிய கடம்பமஞ் சரியினுங் காவி
தாதழுந்திய கபோலமண் டலனையந் தமிலா
வேதமும்பகர்ந் தரிந்திடா விமலனை விண்ணோர்
நாதநீலமே னியனையே நவில்வதென் னாவே 31

ஒருபுறங்கடை நோக்கிய விழியிமையுலவ
முருகிதட்கனி பாதியின் முகிழிதமாகப்
பொருவிலாபர பாப்பொடு புலன்கொடுபலுகும்
முரளிசேர் பரமாகிய மால்பத முயல்வாம். 32

மகபதி குண்டிநேசன் மகிழுருக் மணியாமானை
ககபதிப் பதாகையுற்ற கதிர்மணித் தேறிலேற்றி
அகிலமுந் துதிக்கச்சென்றங் ககமகிழ் மணமேசெய்த
முகில்நிறத் தமாலநீல முகுந்தனை முயற்சிசெய்வாம். 33

பூமிசையின் வழிநடப்பீர் போகாதே நில்லு மிங்கோர்புதுமைகேளீர், வீமநதிக் கறையிலொரு விடமார்க்க னவனீல மேக வண்ணன், காமுகனு யிடையிலிரு கைகொடுத்துத்திகம்பானு நிற்பனவ்வீர்கண்டீரால், ஆமவச முறவுள்ளத் தனைத்தையுமே பரிப்பனப்பாலறியலாமே. 34

அங்கனைக்கு மங்கனைக்கு மந்தரத்தில் மாதவன்
அங்கவர்க்கு மங்கவர்க்கு மந்தரத்திலங்கனை
எங்குமிப் படிக்கலந் திலங்குமண்ட லந்தனில்
துங்கவேணுவூதினார்தொடர்ந்துபெண்கள்சூழவே. 35

கேகயங்கள் வாணியிற் கிளாவோதி மக்குழாம்
ஓகையுற்றதாமரைக்கு ளோசையுற்ற வாமெனப்
போகமாமன் வேய்வனம் புகைத்தவன்னி மாயவன்
மோகவேணுவூதினார்முயன்றுபெண்கள்மொய்க்கவே.

மங்கையர் மணியாங் கோபிகையொருத்தி
மகரயாழ் காமகிற்கொண்டு
அங்குலி யதனால் மீட்டிடுங்கான
மச்சுதன்கேட்டடலசைத்தான்
கிங்கிணியொலிக்க மலர்ப்பத நடிக்க
கிளர்மறைப்பொருள் தனையும்
பங்கயக்கண்ணன் பாடியே மகிழ்செய்
பதங்களைப் பணிந்துவாழ் குவமே. 37

தேகவடிவாலழக ஞதாவி ஞயகுழல்
சேர்மதுர வோசையதனுள்,
கோகுலமு மாகுலம தாயவசு மாகவரு
கோவியர்ம னேகர்ன்மகா,
மோகம்வள ராயர்குல மோகினியர் மாவிரக
மோகமத ரூபநிறைநீர்,
மேகநிற மாயவன் விவேகயறியாவென்மன
மேவுவ னெனுளுமவனே. 38

KOVILOOR MADALAYAM

பிருந்தாவனந்தனில் ராஜமண்டலமதனில்
பிரியமுளமாதொருத்தி,
போரவலொடுகண்ணன்முகநோக்கி யவள்மனம்
பிறியா திருக்குமளவில்,
மருந்தனையமொழிகுழலின்மதுவுண்டவோர்வண்டு
மதிமுகந்தனின்முன்வரவே,
மாமதி மயங்கியவன்மார்பினைத்தழுவியே
மகிழ்வுற்று நின்றளதுபோல்,
பாங்கொளிருமணியணிப் பூண்டவொருமாதுதன்
பதுமமுகை மார்பணிந்த,
பட்டாடை நழுகவே நாணியவள் மாதவன்
பார்க்குமுன மோடியவனைப்,
பொருந்தியே யாலிங்கனஞ்செய்ய மகிழ்வுற்ற
புனிதனடி தன்னில் மனதை,
போகவே செயினமது பாவமதகற்றிபணி
பூண்டிடச்செய்தாள்வனே. 39

மலர்மகணாத னாகிய கண்ணன்
மங்கையர் குழாத்திடை நின்று,
அலர்பரிமளமாந் துளபமாமாலை
யன்புடன் மார்பினிற்சூடி,
நலமுடைவேணு வாய்தனின் வைத்து
நவின்றுள கானத்தின் மகிழ்ந்து,
பலர்களுந்தனது வசமுறச்செய்த
பரமன்றன் பதமலர்த்துணையே. 40

மங்கையர்நடுவினின்று மாதவன்வேணுதன்னை
செங்கையிற்கொண்டுநோக்கசிற்றிடை யொருத்திதாள
மிங்கிதமுடனேபோட யிசையுடன் பலருமபாட
அங்கவர்பண்ணுக்கேற்ப வமலனுங்கானஞ்செய்தான்.

ஆயர்சுந்தரிராதை யழகுபருவமுமுடைய
ளாத்மகுண சமதமமதில்,
தூயருக் மணிநிகர் சத்யபாமைக்காக
சொர்ணநா டதுதன்னிலே,
நேயமுறுபாரிசா தத்தருபிடிங்கியே
நீள்புழக்கடையில் வைத்த,
மாயன்யமுனாதீரபாண்டீரநிழல்கான
மதுசெய்துமகிழ்வித்தனன். 42

விண்படர வளர்ந்தோங்கி விளங்குவதோர் மருது முன்னே மேவியப்பால், தண்படரு மொற்றையடித் தடங்கடக்கி லாயர்புரஞ் சார்பிலேகி, கண்பெருகப் பெருகுபுனற் காளிந்தி யருகுபசுங் கானந் தன்னின்,

நண்பர்பசுத் திரள்புரக்கு நாரணன் காண்பிப்பனல்ல வழியைத்தானே. 43

கோமளமேனியிற்படிந்த கோதூளியோடு சிறு குழாங்களோடும், ஆமருவி நிரைமேய்த்தவ் வந்திநே ரந்திரும்பவகங்கடோறும், தாமறிந்தங் கவாவர்தம் பசுவகைத்தாமணிமுறையிற்றளைவதற்குப், போமரிய பதமுடைய கோபாலவடிவரெனைப் புரப்பர்தாமே

அகிலவடி வழகதற்கோர் நிதியமாகு
மகவிடத்தி லாச்சரிய சமுகமாகும்,
மகவொளியா மவைக்குநிச வாசமாகும
மட்டுமிதமில்லாநாற்கதியுமாகும்,
சுகிர்தபல மாகுமிடை மாதர்க் குள்ளந்
துலங்கியவாக் காதி தெய்வமாகுஞ்சிந்தை,
மகிழ்வுறவாசையதாகுஞ் செகந்தனக்கோர்
மங்களமுமாகுமதைவாழ்த்துவோமே. 45

அருணதா மெனுமுபய கரகமல மிலகுபரி
யணைகயி றுமடிகளையுமாய்,
தாளமிடுசாமுமணிமகரவிரு குழையுமணி
தமனியநல் வடமசையவே,
துரகநடை முடுகவிடு மளவில்முகம்வியர்வுதரு
சுரிகுழலி லழகொழுகவே,
கரியமுகிலெனும்விஜய, ஸாரதம்விடுமணியெனது
கனவு நினைவினு முறைகவே. 46

விசையன்மணித் தேர்புரவி மீதுநகத் தாற்சொரிந்து மேனியெங்கும், அசையவிரு கைத்தலத்தா, லள்ளியநீர் கொண்டுகுளிப்பாட்டி வாயின், இசையவதன்கயிறுகடித் தினிதான வியர்வுமுகத் திலங்கவாசிகசைபுனைந்த மௌலி யொடுங் கண்ணெதிரே வரவேணுங்கருணைமாலே. 47

இடையுவதி மாதர்கள் சகாயன்மீதில்
யவ்வனத்தினல்முகவுல் லாசன்மீதில்,
நடையில்சில விளையாட்டி நயத்தின்மந்த,
நடையிலெதிரில்லாத நாதன்மீதில்
தடையிலாருளக்கமலத்தாளன்மீதில்
தந்தையெனும் நந்தர்கோன்றனயன்மீதில்,
அடையநினை வுடையமதி யோடென்னெஞ்ச
மகலாமலிருக்குமிகவாசையாலே. 48

குறுநகையில் நிலவுதரு துவரிதழி னமுதுபொழி
கூவுகுழ லோசையதனல்,
நறுமலர்கள்நிறைவனமும்வனமுறையுமுயிர்பலவு
நாகரிகமாய் மகிழவே,
யுறுபுளகமோடுனது பதகமலமதைநினையும்
யோகியர்களாசை நிறைய,
மறுவில்கதியடையவருள்மதுரமணியெனுமெமது
மாயன்மிகவாழ்பவனரோ. 49

அதிமோக விடைமாத ரோடுகூடி
வனுபோகஞ்செய்யவவ ராய்ந்தகாம,

விதியாக விளைத்தகுறி யடையாளங்கள்
மேவுநிறை புளகமுறு மேனியானே,
சதுர்வேத முறையுரையில் காணுதானே
தத்துவமென் றறிசுத்தத்தனுவுளானே,
மதிமே வுநவநீத சோரன்றன்னே
மனதிலுறவைப்பதெந்தன் மார்க்கந்தானே.

புதுநவநீதக்கள்ளன் புகுந்துள்ளே யிருப்பக் கண்டு, கதவு பூட்டிட்டோர் மாது கடுகினளசோதை முன்னஞ், சுதனையாங் குரலிற்றும்பாற் சூழ்ந்துசேர்ந் திருப்பக்கண்டு, அதிசயித்தேதுஞ்சொல்லா தனையவள் திகைத்தே நின்றுள். 51

நவமணிதலத்துநந்தர்நந் தனன் றவழ்ந்துசெல்லப், பவளமா மதிமுகஞ்செம் பதுமமென் றதனை நாடிக், கவனமாயெடுப்பத்தன்கைக் ககப்படா மையினுற் சிந்தை, துவளமாதாவைநோக்கிச் சொரியநீ ரழுது நின்றுன். 52

ஆனந்த முறவசோ தையுநோக்க விடைமாத
ரதிமோகமாகி நோக்க,
வானிந்திரன்சங்கை யுடனேக்கமலர் கொண்டு
வருசித்தர் புவியுநோக்க,
கோனந்த குலபாலர் கூசலுட னேக்கநகர்
கூட்டமிட் டன்பினேக்கத்,
தானந்த மலையெடுத் தனைவரையு நோக்கியருள்
தாமோதரன் கதியரோ. 53

உபாசனை விடாததெளி ஞானியர்புராதன
ரூபாதியடையா மனதுளோர்,
சுபாவபர மாகும் நிறைசோதிமயமாகிய
சுவரூபமயராதுணர்குவார்,
கிர்பாசலதியாகிய வசோதைமக ஞர்பகிமை
கீதைகதை பாகவதமாம்,
அபாரமது ராம்ர்த ரசாயன மளாவிநிறை
யாழ்கடலில்மூழ்குமவரே. 54

ததிவிலை கூறக்கண்டோர் தருணிபாற் பானையேந்தி
மதி நவநீதசோரன் வசமதாய் மயக்கமுற்று
நிதிதருந்தெருவிற்சென்று நீலவண்ண கோவிந்தா
யதுகுலதிலகா மாதவாவென வியம்பலுற்றாள். 55

தேவகி மைந்தனென சிறுமத யானைக்கன்று
ஆவதுகட்டுங்கம்ப மவனியில் மூன்றே தென்னில்
கோவியர்குங்குமஞ்சேர் கொங்கையுமுரலுங்கொற்ற
மேவியபெரியோர் ஞான விவேகமன் மனமுந்தானே.

கையாவிந்தந்தன்னாற் காலாவிந்தம்பற்றி
மொய்யாவிந்தஞ்சூழ்ந்த முகவாவிந்தமோந்து
பையாவிந்தனாவிற் பள்ளிகொள்பரமனென்றன்
மெய்யாவிந்தத்துள்ளே விளங்குவனுளங் குளிர்ந்தே.

அரணயணிங்ஙன் வருகநல்வறத்தோ
வமரர்சேனாபதி சுகமோ,

சுரபதிகினதா குலமெதோவென்று
தூங்கியமாயனீ துரைப்பக்,
காவுடனசோதை கனவுகண்டனையோ
கண்ணனே யெனவுளங்கலங்கி,
சுருதியின் மொழியாற் ருனுமேதூ தூ
தூவெனக் காத்தசொற் றுணையே. 58

பரமபதநாதனுங் கண்ணன்வொரு தினமன்னையை
பாலுணுங் கிண்ணி கேட்டு,
பரிவுட னழைத்திடவசோதையேதுக்கென்ன
பாலுண்ணவேண்டு மென்ன
சிரித்தமுக முடையளாய் சிரமிப்போதிலை
சென்றது பசுக்கள் மேய,
சேதாவும் வருமிரவு வந்தபின் கறந்துபால்
செல்வனே யீவனென்ன,
அரியுமே வன்னையை யிரவென்பதென்னென
யிருள்மூடு கால மதென,
அரவிந்த மலர்போன்ற விருகண்க டனைமூடி
யன்னையே யிருள் வந்தது,
சுரபியின் பால்கொடு கொடுவென்று மேலாடை
சோர்ந்திட யிழுக்க நேர்ந்த,
சுந்தரனை யன்றுநாங் கண்டிலேம் நம்மையும்
சொந்தாக்கி ரட்சிப்பனே. 59

அண்ணன்யமுனைப் புளினத்து ளாடச்செல்லா
முன்கமலக், கண்ணுகபிலைப் பாலருந்தாய் கடுகெச்சிகை

நீண் டிடுமென்ன, வண்ணமாதா வுரைத்திடலு மாயோன்பாதி குடித்துமலர், நண்ணுஞ் சிகைதொட் டகமகிழ்ந்த நாராயணனை நம்பினமே. 60

வெள்ளிமலை வெண்ணெயா யவனிசிறு மண்ணாகி
வெண்கடற் சங்குபாலாய்,
உள்ளவுல குண்டகரு மாயன்மிகு நகைவாயி
னுட்கண்ட சீர்ணமென்றே,
கள்ளவிழ் கருங்குழலசோதை கெட்டேனென்று
கைநெறித்தேங்கியென் கோ,
வள்ளல் பல்லாண்டுது துவென்றவள்காத்த
மாயனே காப்பெமக்கே. 61

பாதிமுகிழ்த்தவிழியரும்பிப் பாலிற்சுரந்த முலை பருந்தில், மீதேயதரங் கடந்தொழுக வேறோர் தனத் தைக் கைவருடச், சோதிமுகத்தாள் மகிழ்ந்தரிதன் சுருளோதியிலோ ரங்குலியாற், கோதிக்கொடுக்க முலை யுண்பான் குளிர்வெண்ணகையான் கோரியதே. 62

உயர்ந்ததன மண்டலமே லுறுவடமுத் தாமணியி னுள்ளே பிம்பந், தயங்குமணி வண்ணனிந்திர நீலவடி வந்தனையுஞ் சாயை நோக்கி, மயங்கியே யகமகிழ்ந்து தலைகவிழ்ந்து பரவசமதாகநோக்கும், சுயம்வரகல் யாணமதி லுருக்குமணி மகிழ்ச்சிதருஞ் சுபங்கடானே.

அம்மனேமாய னருந்தினன் மண்ணென்
றலாயுதனலறிநின் றுரைப்ப,

இம்மொழி பொய்யென் றியாதவன் கூற
யசோதைதா னிங்கித மறிந்தே,
வெம்மையுற் றெங்ஙன் வாய்திற வென்ன
விமலனும் பவளவாய்விரிப்பச்,
செம்மையா யுலகம் யாவையுங் கண்டு
திகைத்தநற் சிறுவனே கதியே. 64

சோதியெனுந்தாரகையார் சுத்திதரும் முத்தினுக்கு
ஓதியதாயானுமென றருகிப்பொருமையினால்
நீதியொடு சோகிணியாள் னீலாத்தினம்மீன்றாள்
கோதிலிடைமாதர்தங்கட் கொங்கைக்கணியவென்றே.

பருமணித்து ணருகில்நிர்த்தம் பண்ணுங்கோ
பாலர்வடி, வுருவிதுதா னென்னவதி னுள்ளேபிம்
பம்பலிக்க, விரகறியா மான்விழியாள் மெய்யென்றே
வெண்ணைதனை, இருவகையாகப் பகிர்ந்தாளிருவருக்கு
மீய்கவென்றே. 66

எந்தாய்பொழுது விடிந்ததெழுந்திரு நூறொடு
நூறுண்டு மென்றன், மைந்தா சிரஞ்சிவி பவாமாதவா
மோகசுசீஇ யென்றே, தந்தாயான யசோதைமகன்
றன்னையெழுப்பி யகமகிழ்ந்த, செந்தாமரையாமென
விளங்குந் திருமால்முகமென் சிந்தையதே. 67

வல்லவியார் மதலையென மாயோன்றன்னை
மகிழ்ந்தெடுத்தவா வொடுவா யமுதமெய்தப்

பல்லவவா யிதழருந்திக் கண்டர்தன்னைப்
பாணியினா லிருக்கிவிரு பாதம்பூட்டி,
மெல்லவொருகைத்தலத்தாலல்குற்றேரின்
மிசைவருடிப்புளகிதவிநோதஞ்செய்யும்,
தொல்லுலக முண்டசிறு தூர்த்தமாயன்
றுரிதமெலாந் துறப்பனதி தூரந்தானே. 68

வாராயிளையாய் மைதிலியை வனத்திற்பிரிந்த மதியேனைக், காரார்காயங் தனிலடர்ந்துக் கருத்த தென்றற் கனல்வீசப், பாராயென்றங்குறங்கியகோபாலன் கனவிற் பகர்ந்ததுகண், டோராதையுஞ்சங்கையையடைந்தா ளிசைந்தமாயன் கதியெமக்கே. 69

மாயனே யிதழை விடுமென்று முலையுண்ட
வாயினாற் பூதனை மரித்தனள் பயந்தேன்,
தூயயிரு கைகளுந் தழுவியிடு போதுமிரு
துணை மருதணைந்தொடிந்ததுகனக னாவி,
போயது நகங்களாற் றொழிலும்பொருந்தாது
போமென்று சரசங்கள் புகலவதி மயலாய்,
நேயமுட னிரவினிற் கமலையாற் றகைவுற்ற
நெடியமால்பதமெமதுநெஞ்சமறவாதே. 70

கண்ணுறங்கிடவென் றசோதை மாயனுக்கோர்
கதைசொல்லவும்மெனக்கேட்டு,
அண்ணலோ ரிராமன் மனைவி ஜானகியோ
டையர்சொல்லால்வனம்புகுந்தான்

தண்ணறும்பஞ்ச வடியினிலவளைத்
தசமுக னெடுத்தன னென்றாள்
எண்ணுமுன் னினைவோ டிளையவர் வில்வில்
லெங்ஙனமெனுமவன் றுணையே. 71

உலகினிற்பாலனென் றுமையுரைப்பார்க் குயர்மலை யொருகரத்தெடுத்தீர், விலகருநீலனென் றுமைப்பகர் வார்க்கு மிகுமிகு சோதியேபோல்வீர், இலகுறு தீரனென் றுமைப்புகல் வாருக் கிராதைகட் கயிற்றினி னிசைவீர், குலவு சம்சாரங் கெடுப்பதெங் ஙனநீர் கோவியர் சாரனென்குவரால். 72

பாலனை யிடையிற்றங்கப் பணியணியணிந்த தண்டைக்
காலனைப் புலிநகஞ்சேர் கழுத்தனைக் கரியமேக
நீலனை யுடையிலாத நிதம்பனை நவநீதத்தின்
சீலனை நந்தகோபன் செல்வனைச் சென்னிசேர்ப்பாம்.

அதிமதுர மொழுகியபா யசத்தினை வலதுகரந் ததும்பவேந்தி, மதிசாற்காலத்துநிறைமண்டலம்போல் வெண்ணைமறு கரத்தில் வாங்கி, முதுபுலியி னகங் கழுத்தி லணிந்துதிகம் பரபால மூர்த்தியா னென் னிதயகம லத்தில்மகிழ்ந் திருந்திடு மசோதையிளங் குழந்தை தானே. 74

கிங்கிணிபசைய நிரந்தரமணிகள் கிணின்கிணி னென வுலவுற், றங்கணபுவியினி லெங்கணுநடமிடு

மம்புய பதமணியுங், குக்குறுகுணுதரு தண்டைகள்
குமுறு சதங்கைகள் பரிபுறமுங், கங்கணவலய மொடுங்
திகள் கருநிற வண்ணனைநினைகுவமால். 75

ஆக்களிநெருக்கத்துடே யலைந்துதா யாயாசத்தின்
ஏக்கமுற்றுடன்பின்னேகவிடைக்கிடைமேனியெங்கும்
கோக்குறுஞ் சேறுதோன்ற குஞ்சியுந் தொங்கநின்ற
பாக்கிய மாகுலங்கோ பாலனைப் பணிகுவோமே. 76

சூடரு மயூரபுஞ்சஞ் சூடிய கொண்டை யானை
கூடிய வாஞ்சைகொண்ட கோவியர் கூட்டத்தானை
பாடிய வதரஞ்சேர்ந்த பனுவலார் முரளியானை
நாடியே நந்தகோபன்மைந்தனைப் பணிநன்னெஞ்சே.

சிறுபிரகலா தனுக்கோர் திவ்யபாக்கிய மதானேன்
மறுவிர ணியனைக்கொல்ல மாநரசிங்க மானேன்
மறைகளாற் றேடத்தக்க வடிவுடைமகிமையுள்ளோன்
உறைகுவனமார்கோனென்னுள்ளத்திறெளிவுதோன்ற

அஞ்சுகந்தருசாரத்தி லதிகசாரமதே தென்னில்
கஞ்சனையுதைத்தோன்பாதக் கமலமென் பதுவேசாரந்
துஞ்சிடுமந்தகாரந் துறந்திடு சுடரேதென்னில்
நெஞ்சினிலந்தகாரி நினைவதே நிறைந்தசோதி 79

நிறையுங்கனகக் கலசநவ நீதசோரனிடத்தில்மல
ருறையுங்கமல விழிக்குவளை யூறுங் கலைவெண்
மதியிடத்தில், நறைவண் டறையுங் கோகுலத்து

நந்தகோபன் குமானிடத், துறையுமெந்தன் மனத்
திடைய ருதவுமாதர் விடனிடத்தே. 80

பாலனீயாவ னீ லாம்பரன் றுணை யுனக்கிங்கென்னச்
சாலவெம்மனைபுகுந்து தயிர்நிறை தாழியிற்கை
யாலென்செய்தாய் நீயென்ன யான்பசுங்கன் றுதேடுஞ்
சிலயேயழாதே யென்று செப்புமால் கதியெமக்கே. 81

இடையரின் முத்தச் சேற்றினைத் திமிர்வீ
ரிருடியர் வேள்வினீண் டிடுவீர்
விடையொடு பசுக்கூப் பிடிலுமை பயில்வீர்
விரதியர் துதிக்குமா றுறைவீர்
துடியிடை மாதர்க் கடிமைசெய்திருப் பீர்
தூயமாதவர்க்குறவாவீர்
அடைவில்நின்னடிகளமைந்த தங்கங்கென்
றறிந்தில னடியன் மாதவனே.

மங்கையர் மணியிராதை வதனமாங் கமலந்தன்னில்
பொங்கமாமதுகரம்போற் பொசிபொசித்துயர்ந்தமாலை
திங்கள்மா முகவசோதை சிறியசெம் மலைக்கோபால
மங்கள வடிவினானை வணங்குவாம்வணங்குவாமே. 83

தூயதாமரைமலர்ந்த துணையெனத்துலங்கு செங்கண்
மாயவ னவதாரத்தின் வகையெலாம் நன்றுநன்றுண்
டாயினு மாயர்மாத ராகுல முடித்து முத்தி
யீயவவ் வாயனல்லால் யெவாதற்குரிய ரம்மா. 84

காலையிற் கன்றுக் கிரங்கியபசுக்கள் கதறிடுங் காலொலி நிரம்பப், பாலகோபாலன் கோர்க்குலநடுவிற் பால்கறந்திடும் பருவத்தில், நீலமேனியுங் கிண்கிணி யரைவடமு நெற்றியிற் சுட்டியுங் கழுத்தில், சீலமாம் புலிவெண் ணகவணி யொடுமென் சிந்தையு ளுறைந் திடுந்திறமாய். 85

கருமுகி லானநீலன் காண்கிலாவுதார லீலன்
காதலந் தரித்தசைலன் கானவே யூதுசீலன்
விரசர்குல பரிபாலன் மெல்லியர்க்கேளிலோலன்
மருநிறை வனமாலன்யென் மனத்துறைபவன் கோபா
லன். 86

மிதனகை தருகோபாலன் விஞ்சுசங்கீதலோலன்
கருதருங் குழல்விசாலன் கள்ளவாசாரலீலன்
சதமக வைரிகாலனு றங்கனல் சேர்ந்தசேலன்
மதுகருங் குவளைநீலன் மனத்துறை பவன்கோபாலன்.

முரளியின்கானலோலன் முடித்தமயூரமௌலன்
நிருதரைக்கடியுங்கால னித்தனுதாரலீலன்
பாகிதமுகமகேலன் பதுமமின்னுநகூலன்
ஒருகருமுகிலின்னீல னுள்ளுறைபவன்கோபாலன். 88

சரசமெய்நிறைந்ததூயன் சச்சிதானந்தகாயன்
தாமுறு நெடியமாயன் சத்யபாமாசகாயன்

இருசமதமத்தினேயன் யிடர்தவிர்த்திடுமுபாயன்
அரிவரிதாயதாயன் அறிவுகோபாலராயன். 89

செந்திருமார்புள்ளானைச் செழுமலர்நயனத்தானை
சந்திரவதனத்தானை தயவருள்கோசத்தானை
இந்திரற்கிளையோன்றன்னை யெதிரிலா வடிவன்றன்னை
சிந்தையில்நினைந்தேன்வாசுதேவனைத்திருமால்தன்னை.




விடமீறிய காளியன் மெய் பதறப்
படமேறிநடித்தமுனைப் புனலுள்
அடுவேகமடைக்கி யமரர்களைத்
திடனுக வருள்புய னின் றிறமே 91

சிகழியின் மயூரச் சிகையொடுநுதலிற்
சிவந்திடு திலத முஞ் செவியில்
உகமிடுதால பத்திரமோடு
மொளிருமூக் குத்திவெண் முத்தும்
அகலிய மார்பி னிலமந்தார
மாலையு மமர்கௌத் துவ மும்
பகர்குழற் கையும் மாதர்சூழ் பீதாம்
பரன்றரு குவன்பர கதியே. 92

மங்கையர் யமுனையாற்றில் வந்துநீராடக்கள்வன்
அங்கவராடையெல்லா மபகரித் தேகுங்காலைச்
செங்கைகளிரண்டுங் கூந்தற்றிரட்சியுமுகிழ்த்தகண்ணுந்
தங்கடங் களவில்மானத் தலங்களை மறைப்பதாமே. 93

சூரியமூக்கின் முத்தின்வெண்கிரணங் கொழித்த கங்காநதிப் புனலுள், நாரியர்மயங்கி நயத்தொடுமருளு நயனமீன் றிரிவன போலும், காரிகையார்தங் கனவிருட்கூந்தற் கட்கடைவண்டினஞ்சுழலப், பாரளந் திடும்பா தாம்புயன் பீதாம்பரன்றருகுவன் பாகதியே.

முரளியின் றவார வொழுங்கினி லெழுந்த
மோகன விசையொலி கேட்டு
இரவினிற் கணவர் புணர்ந்திடப் பிணைந்த
விடைச்சிய ரெழுந்துடன் விடுத்து
கருநிறக்கூந்தற் காங்கொள வதாங்
கனதன முந்துடி துடிப்ப
வருமவர் விரகங் கண்டுகொண்டாடி
மருவுமா யனைநினைந் திடுவாம். 95

தேவகியுதரத் தலத்தினி லுதித்துத் தேனுகோ பாலனும் நந்தன், ஆவலில்மகவா சையில் வசுதேவ னருளினாற் கொண்டமா ணிக்கம், கோவியர்பூணும் பூடணமாயர் குழாமணி வடநடுரத்னம், மேவியென் னுளத்தி லிந்திரநீல மெனவிளங்கிய விளக்கொளியாம்.

ஆயனைமணைமேற் குனித்தவன்றேண்மே லச்சுதனின்றுறியனைபால், தோயுமுன்பாண்டந்துளைத்தத னூடே சொரிந்தபா லிருகையிற் சுருக்கி, வாயிடை மடுத்துமணியசையாமல் மயிர்முடி யசைப்பவந்தடுத்த சேயிழை விழியில் சிலதுகொப்பளித்த தேவகிநந்த னென்றனையே. 97

மறைவழியின் வேழ்விகணிரப்பி வெகுதன்மம்
மறையவர்க் கீய்ந்து பெரியோர்
முறைபணிந் ததிதவஞ் செய்துசென் மார்தா
முயன்றபலனு லெமக்கோர்
அறையின்மல் லரைவென்று பக்தாக நீக்கியருள்
மேவிமிக வாழு மளிமேல்
நிறைபவ விரோதமா மரிதாய பக்திநே
சமுமமைப் பித்ததாமே. 98

மாயனின் கிருபைவைக்கில் மன்னுமக் குணத்தாலேது
ஆயருளில்லாதாகி லக்குழந்தைக்கென் னேது
நாயகன் வசமானாலு நயமில்லா னாகினாலும்
நேயமாதர்க்குப்பூசுங் களபமே நிமித்தமன்றே. 99

அருணோதயத்திற் கோகுலத்தி லாயர்மாத
ரனைவோரும், விரைவோடெழுந்து ததிமதிக்கில்
மிகவெண்ணகையில் நிலவுதரக், கரமேவுவளைக்குல
மொலிப்பகனகத் துகிலின்கொழுந்தசைய, அரிகீர்த்தன
முமுரைப்பார்க்கு வருள்கோபாலன் கதியெமக்கே. 100

குண்டலங்க ளசையுமிரு குழையுந் தோளுங்
கூன்புருவக் கொடியுமிதழ் குவிந்த வாயும்
விண்டு முரளிக்கிடு துவாரந் தோறும்
விரல்கள் பலவும் பதுங்கும் விதமுமோர்பால்
புண்டரிக விழிநோக்கும் முக்கோணாகிப்
பூநிறைந்த கற்பகத்தோர் புறநின்றாதும்

சென்றழகு கோபால கிருஷ்ணமூர்த்தி
செகன்மோக னுகிருதி சிந்திப்பாமே. 101

மல்லருக்குச்சைலமாமானகாயனுய் மற்றவர்க்குச் சிறுவனுய், நல்லவிடை மாதர்க்குமோகனு யாவர்க்கு நவிலரிய வேழையாகி, கொல்லவரு காலனுய் கஞ்சனுக்குத்தேவ குலிசர்க்கு நிறைமூர்த்தியாய், எல்லவர்க்குஞ்சிந்தை யானந்தமாய்நின்ற வெங்கள் கோபாலன் கதியே, 102

நவமணி தலத்தினில் ருக்குமணிமா மாதை
நயமாக மடியில் வைத்து
வுவகையொடு நெற்றியில் கஸ்தூரி திலதமிட்
டொருகையிரு கொங்கை யதனில்
தவளவொளி சிறுநகையி லிருவரும் மன்மதன்
றனைப்பூசை செய்துமருவி
கவனமுற வாயரொடு கோவியர்கள் சூழவுரை
கருமாயனருள்பவனரோ. 103

பொன்னுருக்மணிதன்மார்பிலுத்தரியப்போர்வை யைக் காத்திஞலிழுப்பத், தன்மகிவதனங் குனித்து நாணமுறத் தன திருகருவிழி நோக்கில், சொன்னமென் முலைமேற் சூதபத்திரமெனத்தோன்றிட முறுவலில் மயங்கும், மின்னனையாளைத் தழுவியே மகிழும் வேணு கோபாலனே கதியே. 104

புவியில் சிறுவரையானகோவர்த்தனத்தையொரு
புயவலியினு லெடுத்தீர்
புண்டரீ காட்சனே வும்மையெவ் வுலகுமே
புகழ்வர்கோ வர்த்தனனென
அவிர்தருவிசும்பாதி வுலகங்கள்யாவையும்
மளவற்ற வண்டங்களும்
அவையில்வாழுயிர்களா மெழுவகைத்தோற்றமு
மனைத்துமே வுதரம்வைத்த
உவமைசொல வொண்ணுதவும்மையெப்பொழுது
வொருமூலமுகட்டில்வைத்து [மே
உரியதொழில் யாவையுமனு யாசமாய்ச்செய்து
மொருவரும் புகழவிலையே
எவரையென் சொல்வது பூர்வபுண் ணியமதி
லெவர்க்குமே கீர்த்தியுண்டாம்
என்றுருக் மணிசொலக்கேட்டுமே மகிழ்வுற்ற
யிறைவனெமை ரட்சிப்பனே. 105

தேவர்கள் ரிஷிகள் பிதிர்க்கள் பூசனையுந் தினஞ்
செயுஞ்சந்திவந்தனமுப், யாவதுஞ்செய்யுஞ் சமர்த்தா
னல்லேன் யாக்கையும் மனமுடன் வாக்கும், பாவமே
பொருந்து மாதலில் யானும் பாண்டவர் துணைவனும்

பாம, தேவனாங் கண்ணன் யதுகுல திலகன் திருவுரு தியானித்துய்குவனே. 106

திருமகடலைவா ஸ்ரீதராவிஜயன்தேசிகனே பலாாமன் அருமையாங் துணைவ கஜேந்திரன் றனக்கு வருள்புரி பங்கயக்கண்ணா, கருணையங்கடலே கஞ்சனைக்கொன்ற கண்ணனே யடியனேன் றனது, மருள்தனைப்போக்கி மலர்ப்பதஞ்சேர்ப்பாய் மற்றொருதெய்வமானறியேன்.

கண்ணன்யமுனாதீரமதினின்று நெற்றியிற் கஸ்தூரிதிலகமுடனே, வண்ணமார்பதனிலே தாளமாலிகையுடன்வளரொளிகௌஸ்துவமணியும், சுண்ணமார் சாந்தமு மணிந்து காமதனிலே சொகுசுவளை முரளி பூண்டும், அண்ணல்கோபியர்கண்டுவானந்தமுறநின்ற வமலனெனைரட்சிப்பனே. 108

பிருந்தாவனந்தனிற் கண்ணனொருதினநின்று
பிரணவப்பொருடன்னையும்
பெரிதான வேதவாக்யங்களும் வேணுவிற்
பிரீதியுடன் மீட்டுமளவிற்
சரிகம பதநியெனும் சப்தசுர மெழுநின்று
சங்கீத முறைவழாது
சாற்றிடுங்காலமதில் பிராக்ஞுமயங்கியே
சாரமே நோக்கி நின்றார்
மிருகங்கள் மேய்ந்தபுல் கடைவாயின் வழிவிட்ட
மிகுமகிள் வடைந்தவாக்கள்

மேலான பிர்மநிலை தனினின்ற முனிவரும்
மேவியே தொழுதுநின்றார்
உருவாக நின்றகன்மலையுங்குழைந்தது
உலர்ந்தமாமுந்தளிர்த்த
உலகிலுள வுயிரெலாஞ் சுவபாவமாறிட
வொருங்குமகிழ் வித்தன னரோ. 109

(முற்றிற்று)

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வர
கிருஷ்ணாய குருப்பிர்மணே நம:








